அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை.

# ஸ்ரீ இராமலிங்க விஜயம்.

[அருட்சோதி வள்ளற்பெருமான் திருவரலாறும்,
அருட்பா விளக்கமும், உபதேசங்களும்
அடங்கியது]

ஆக்கியோன்
சுவாமி சுத்தானந்த பாரதியார்.

வெளியிட்டோர்:
அன்பு நிலயம்,
சிங்கப்பூர்.
1936.

---



விலை அரை வெள்ளி
பத்தணு.

திருவளர் செல்வன்.

ஸ்ரீ. பழநியப்பனுக்கு.

அன்பளிப்பு.

வை. இராமசாமி

17, கோட்டை ரோடு,

ஈ. ரோடு.

28. 2.1946.

அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை.

# ஸ்ரீ இராமலிங்க விஜயம்.

[அருட்சோதி வள்ளற்பெருமான் திருவரலாறும்,
அருட்பா விளக்கமும், உபதேசங்களும்
அடங்கியது]



ஆக்கியோன்

சுவாமி சுத்தானந்த பாரதியார்.



வெளியிட்டோர்:
அன்பு நிலயம்,
சிங்கப்பூர்.
1936.

---



விலை அரை வெள்ளி
பத்தணா.

# அருட்பெருஞ்ஜோதி

# வாசகம்.

---

"நினைந்து நினைந் துணர்ந் துணர்ந்து நெகிழ்ந்து
[நெகிழ்ந் தன்பே
நிறைந்து நிறைந் தூற்றெழுங்கண் ணீரதனு லுடம்பு
நனைந்து நனைந் "தருளமுதே! நன்னிதியே! ஞான
நடத்தரசே! என்னுரிமை நாயகனே" யென்று
வனைந்து வனைந் தேத்துது நாம் வம்மினுலகியலீர்!
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்!
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல்
[கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருண மிதுவே!"

சாதியிலே மதங்களிலே, சமயநெறி களிலே,
சாத்திரச் சந்தடிகளிலே, கோத்திரச்சண் டையிலே,
ஆதியிலே யபிமானித் தலைகின்ற வுலகீர்!
அலைந்தலைந்து வீணேநீ ரழிதலழ கலவே!
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே ஞான
நிருத்தமிடுந் தனித்தலைவர் ஒருத்தர்அவர் தாமே
வீதியிலே யருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றே னுமையே!

# முன்னுரை.

இராமலிங்க வள்ளலார் நவயுகத்து நபி. நமது பாரத தேசம் சாதிமதச் சண்டைச் சச்சரவுகளாலும் பேத புத்தியாலும் மன ஒற்றுமை கெட்டு, உள்ளன்பிழந்து, வருந்துகிறது. அதற்கு ஒரு சுத்த ஸமரஸ ஸங்மார்க்கத்தை விளக்கி, எல்லா உயிர்களும் ஒரு அருட் குலமாக வாழும்படி செய்யவே வள்ளற் பெருமான் அவதரித்தார். தமது வாழ்வு முழுதையும், கடவுளருள் பெற்ற சோதிநதியாக்கி, உலகுயிர் செழிக்கப் பாய்ச்சினர். இவ்வாறு உள்ளத்தை அள்ளும் உருக்கமான அருட் பாடல்களை வேறெந்த நாட்டு இலக்கியங்களிலும் காண்பதரிது. அருட்பா தமிழுக்கினிது பாட்டிற்கினிது, பொருளுக்கினிது, போற்றி வழிபடற்கினிது. அருட்பா ஸர்வாத்ம ஸமரஸ வேதம். இதன் உண்மை நாளுக்கு நாள் நன்கு விளங்குகிறது.

இத்தகைய அருள் வேதத்தின் பொருளும், பெருமையும், அதைப் பாடிய ஜீவகாருண்ய மூர்த்தியான அருட்சோதி வள்ளலார் பெருமையும் தமிழருக்கு நன்கு விளங்கவே இந்நூல் சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்களால் எழுதப்பெற்றது. அருட்பாவை ஆதாரமாகக் கொண்டே வள்ளலார் வரலாற்றை ஆசிரியர் எழுதியுள்ளார். அருட்பாவின் திருவுள்ளம் என்றே இந்நூலைக் கூறலாம். இந்நூல் நல்ல தமிழில் யாவரும் எளிதில் பொருளறிந்து படிக்குமாறு எழுதப் பெற்றிருக்கிறது. கலாசாலை மாணவருக்குச் சமய இலக்கியப் பாடமாக இந்நூல் நன்கு பயனாகும் என்பது அறிஞர் சம்மதம். தமிழும், சாதிமத பேதமற்ற ஸர்வ ஸமரஸ உணர்ச்சியும், கடவுளன்பும், ஆருயிரன்பும் வளர்ந்து பெருக, இத்தகைய நல்லிலக்கியங்களை பாட புத்தக சபையார் (Text Book Committee) மாணவரிடையே பெரிதும் பரவச்செய்ய மனம் வைத்தல் நல்லது.

ஒவ்வொரு தமிழரும் இந்நூலைப் பன்முறை ஓதிப் பயன் பெறத்தகும்.

இந்நூல் எமது நிலயத்தின் இரண்டாவது அன்பு மலராகத் தமிழ்த்தாய் திருவடியில் அர்ப்பிக்கப்படுகிறது. இதை அன்பொடு எழுதியுதவி வெளியிட அனுமதித்த ஸ்வாமிஜீ அவர்களை தமிழுலகு மிகமிக நன்கறியும். அடிகளின் தவத்தொண்டெல்லாம் தமிழ்த்தொண்டு. இப்பெரியார் தமது ஒவ்வொரு மூச்சையும் தமிழம்மைக்குப் புதுப் புது காவிய ஓவிய மணிகளை அணிவித்து அழகுசெய்வதிலேயே பயன்படுத்தி இன்புறுகிறார். இவர் பாடியுள்ள இன்பமாலை, தர்மஸாதனம், பாரத சக்தி முதலிய காவிய ரத்னங்கள் வருங்காலத் தமிழ் வேதங்களாகும். எள்ளளவும் பெயர் புகழ் விரும்பாது தமிழ்த்தொண்டாற்றும் சுவாமிகட்கு, எமது உள்ளன்பும், நன்றியும் என்றும் உரியன. இந்நூலுக்கு மனமுவந்து வெளியீட்டுச் செலவை உதவிய பேரன்பருக்கு எமது நன்றி கூறுதும். இதைப் பிழையற அச்சிட்டுக் கொடுத்துதவிய புதுக்கோட்டை ஜனமித்திரன் ஆசிரியர் ஸ்ரீமான் சுப்ரமணிய ஐயருக்கும், அச்சு நமுனுக்களைப் பார்த்துதவிய புதுக்கோட்டை மகாராஜா கல்லூரி தமிழ்ப் பண்டிதரும், பல தமிழ்ப் புத்தகங்கட்கு ஆசிரியருமாகிய வித்வான் திருவாளர் கனக ராஜய்யரவர்கட்கும் கடப்பாடுடையோம். எமது நிலயம் வெளியீடுகட்கு மென்மேலும் இப்பேரறிஞரின் பெருந்துணையை வேண்டுகிறோம். ஓம் சக்தி.

தமிழை வளர்க்குந் தவஞ்செய்வோம்; தாயின்
அமிழ்தருளு மன்பறிவாற் றல்.

15—8—36 }
சிங்கப்பூர் }

அன்பு நிலயத்தார்.

ஸ்ரீ:

# நான்முகம்.

---

திருவருட் பிரகாச வள்ளலார் என்ற இராமலிங்க சுவாமிகள் வரலாறு இன்று ஒரு புதிய உருவத்திலே தமிழகத்திற் புகுகின்றது. உலகம் உணரும் ஞானனந்த வாரிதியாய் இன்று புதுச்சேரியிலே தவம்பூண்டிருக்கும் அரவிந்தகோஷ் மகாமுனிவரது ஆசிரமத்திலே மோன நெறியில் யோகம்புரியும் சுத்தானந்த பாரதியாரையும் அப்பெரியாரது தமிழ்ப் பணியையும் அவர் தமக்கெனப் படைத்துக்கொண்டுள்ள அன்பூற்றெடுக்கும் அருள் தமிழ் நடையையும் தமிழுலகம் நன்குணரும். இனிமையும் எளிமையும் ஆழமும் அகலமும் அன்பின் செறிவும் பொருந்திய அந்நடையிலே பாரதியார் சமீபகாலத்திலே இயற்றித் தமிழராவார் உள்ளுருகப் பயின்றின்புற்று மெய்ப்பயன் பெறுமாறு வெளியிட்ட நூல்கள் மிகப்பலவாம். திருவண்ணமலை ரமண பகவானது சரிதமாய் வெளிவந்த ரமண விஜயமும், இராமகிருஷ்ண பரமஹம்ஸ சரித்திர நாடகமும் இத்துறையிலே சிறந்தனவாம்.

தமிழ் நாட்டு யோகியாகிய இப்பெரியார் தமது யோகத்தினிடையிலே அருட் செல்வத்தையன்றி வேறொரு பொருளைக் கருதுவாராயின் அது தமிழ்ச் செல்வமே. இராமலிங்கப் பெருமான் வரலாற்றின் பலநுணுக்கங்களும் முன்னே பலராற் பலவாறு புகலப்பட்டிருப்பினும் இப்பெரியார் வாக்கில் அவை ஒரு புது நலத்தோடு புகுந்து வருகின்றன. நவமணிகளின் மேதக்க தவமணிகளாகிய இராமலிங்கப் பிள்ளையார் பாட்டுக்கள் பல இப்பெரியார்க்கு அவரது உண்மையுருவை விளக்கின. வால்மீகர்க்கும் துளசிதாசர்க்கும் கம்பநாடர்க்கும் முன்னின்று தனது சரித்திராமிருத சாரத்தை நடித்துக் காட்டிய இராம

பிரான் போன்றே பாரதியார் மனக்கண்ணின் முன்பு இராம லிங்க வள்ளலார் திருவிளையாடல்களின் உண்மைகள் பல தோன்றி நிலைபெற்று இச்சிறு புத்தகத்தின் வாயிலாக வெளிவந்துள்ளன.

அருளிச் செயல்களை அன்புருகப் பயில்வாரும் அமலன் அருள் வெள்ளத்திலே ஆடமுயல்வாரும், அமலனடிமைத் திறம் இப்படியோ அப்படியோ என்னாது எப்படியும் பொருந்துவன என்று நினைக்கும் உள்ளப்பாங்குடையாரும் பெருகி வரும் நாள் இதுவேயாம். கடவுள் உண்டோ கடவுண்மை உளதோ, அவன் நமக்கு ஆண்டவனோ, நாம் அவனுக்கு அடிமைகளோ, அவன் ஒருவனோ, ஒன்றோ பலவோ, ஒருத்தியோ, அன்னையோ, அப்பனோ, என்றின் னோரன்ன பல வினாக்கள் எழுந்து விடைகளின் தோற்றம் அவசியமாய் உள்ளதும் இந்நாளேயாம்.

உலகம் உருவத்தால் அகன்றிருப்பினும் உலக மக்கள் இந்நாளிலே நெருங்கி உறவாடத்தக்க பேறுகள் பல பெற் றுள்ளனர். அவன் அருள் விளையாட்டை ஒருவர் அறிந்த வாறே பிறரும் அறியவேண்டும் என்று வற்புறுத்துவார் தொகை சுருங்குகின்றது. எப்படியும் அவன் அறியப்படும் பொருளேயாவன் என்ற உணர்ச்சி வலிமைபெற்று வருகின் றது. இவ்வுணர்ச்சியை அனுபவத்தால் அள்ளித் தெளித்த நல்லோருள் தலைமணி என்னத்தக்க இராமலிங்க வள்ளலாரது திருச்சரிதம் புதுயுகத்துப் புண்ணிய புராணமே. இதனை ஆத்மானுபவத்தோடு கலந்து எழுதியுதவிய தமிழ் நாட்டு யோகி சுத்தானந்த பாரதியார்க்குத் தமிழுலகம் மிகவும் கடப் பாடுடையது. உலக மக்கள் உள்ளத்திலே அறிவுச்சுடர் கொளுத்தவல்ல இத்தகைய நூல்மணிகள் பலவற்றைத் தமிழ்த்தாய் புனைந்து மகிழ்வாளாக.

நா. கனகராஜையர்.

உ

அருட்பெருஞ் சோதி-தனிப்பெருங் கருணை.

# அருட்பிரகாச மாலை.

## விருத்தம்.

க

திருப்பொதுவில் ஞானநடம் புரிகின்ற
தெய்வசிகா மணியின் சேயை,
இருட்குலத்தைப் பெருக்குகின்ற மடமையிடர்
மாற்றவந்த இரவி தன்னைக்
கருக்கணக்கில் வாதவனைக் காலனனு
காதகனல் மேனி யானை,
அருட்சமயத் தந்தையினை, யன்பருக்குத்
தாயானை யடைந்து வாழ்வாம்.

உ

முருகென்னும் பொருள் விளங்கு முத்திளமை
யெழில்குலுங்கு முகத்தி னானைத்
தருணமழை போலடியார் தாகத்தைத்
தணிக்கின்ற தயைமிக் கானைக்
கருணைவிரி மனத்தானை, யெவ்வுயிருந்
தன்னுயிர்போற் கருதுவானை,
குருமணியென் றுலகமெலாங் கும்பிடத்தக்
கோனைமனங் குறித்து வாழ்வோம்!

ங

எத்தனையோ, தத்துவங்கள்; அத்தனைக்கும்
இசைவாகி யவற்றின் மேலாய்
ஒத்துலகில் எல்லாரும் ஒருகுலமாய்
அருட்பொதுவிற் செழிப்புற் றோங்க,
சுத்தசிவ ஸன்மார்க்க சங்கத்தை
முறைவகுத்த சோதி தன்னை,
சித்தெல்லாம் வல்லவனைத் திருஞான
தேசிகனைச் சிந்தை செய்வோம்.

ச

ஊனுருகி, யுயிருருகி, யுள்ளுருகிப்
பாய்ந்தின்ப வூற்றெ டுக்கும்
தேனருவி யாகிவளர் தெய்வீகத்
திருவருட்பா செழித்த வூற்றை,
மானவர்க்குப் புதுவழியும் புதுயுகமும்
புதுவாழ்வும் வழங்கி னானை,
வானரசைக் கொணர்ந்தானைத் துரியவள
நாட்டரசை வழுத்தி நிற்பாம்.

ரு

பித்துலகர் பிதற்றுகின்ற மதவாதச்
சூதுகளைப் பிறகிட் டோட்டி,
சுத்தான்ம வொருப்பாட்டின் உரிமைநெறி
முதன்முதலிற் றுலக்கி னானைச்
செத்தாரை யெழுப்புகின்ற ஞானசஞ்
ஜீவியினைச் சச்சித் தின்ப
'தத்துவனைத் தமிழ்வேத வித்தகனைத்
தாள்பணிந்து சாற்றுவோ மால்!

௬

தினைத்துணையும் பேதமின்றி சீவகா
 ருண்யவழி சேர்ந்து வாழ,
மனத்திருளை மாற்றியறி வானந்தத்
 துரியமலை வள நாடேறி,
நினைத்திடவும் முடியாத நிலைக்குநம்மை
 யழைத்தானை, நேரி லோர்நாள்
அனைத்துலகும் அறிவானைத் தமிழரின்னும்
 அறியானை, யணிந்து வாழ்வோம்.

௭

பலமதங்கள் ஒன்றெனவே வடக்கினிலும்
 மேற்கினிலும் பகரு முன்பே,
தலமுயருந் தமிழ்நாட்டில் சமரஸ
 ஸன்மார்க்க மெனுஞ் சங்க மூதும்
நலமெலாம் உருவெடுத்த நவயுகத்து
 நபிமணியை, ஞான விண்ணை,
உலகெலாம் ஆளுனை, ஒப்புயர்வில்
 லான்றன்னை யுன்னி வாழ்வாம்.

௮

மருட்சமய வாதுகளும், மாமாலச்
 சடங்குகளும், மண்ணைக் கவ்வ,
இருட்சாதி வேற்றுமைகள் இடர்செய்யும்
 பிரிவினைகள் இரிந்து தேய,
பொருட்செறிந்த மணிவாக்கும் பொதுநலஞ்செய்
 புண்ணியமும் பூண்டெ மூந்த
அருட்சோதி ராமலிங்கப் பெருமானின்
 அடிமலர்கள் முடியில் வைப்பாம்!

இராமலிங்க ஜயந்தி
29-9-1935

சுத்தானந்த பாரதி.



உ

அருட்பெருஞ் சோதி

# இராமலிங்க விஜயம்.



## க. அப்பன் முன்னிலை.

---

அகத்தே கறுத்துப் புறத்துவெளுத்
திருந்த உலக ரனைவரையுஞ்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத் தடைவித் திடஅவரும்
இகத்தே பரத்தைப் பெற்றுமகிழ்ந்
திடுதற் கென்றே யெனையிந்த
யுகத்தே யிறைவன் வருவிக்க
வுற்றே னருளைப் பெற்றேனே.

அருளாட்சி நாட்டி, அவனியை விண்ணாக்க அருளி லுதித்து, அருளிற் பழுத்து, அருளமுதளித்த அருட்சோதி வள்ளல், அப்பனும் குருவுமான அருணையகன், ஞான நடத்தரசன் திருக்கோயிலுக்கருகிலேயே அவதரித்தார்.

அஞ்சலை நீ ஒரு சிறிதும் என் மகனே!
அருட்பெருஞ் ஜோதியை யளித்தன முனக்கே
துஞ்சிய மாந்தரை யெழுப்புக நலமே;
சூழ்ந்தசன் மார்க்கத்திற் செலுத்துக சுகமே.
விஞ்சுற மெய்ப்பொருள் மேனிலை தனிலே
விஞ்சைகள் பலவுள விளக்குக வென்றாய்!
தஞ்சமென் றவர்க்கருள் சத்திய முதலே
தனிநடராஜவென் சத்குரு மணியே!

இத்தகைய குருமணி திருநடனம் புரிவது தில்லை; பஞ்சபூதத் தலங்களில் தகராகாயப் பரவெளியாயிலங்குவது சிதம்பரம். அது உலகன்னையின் உள்ளம் போன்றது. இருபதாம் நூற்றாண்டின் நவீனம் அதை எப்படிக் கருதினும், சிதம்பர ரகசியத்தையும், அதன் தத்துவ அமைப்பின் நுட்பத்தையும் உள்ளே யறிந்து காண்போருக்குச் சிதம்பரம் சித்தாந்த முத்திவடிவென விளங்கும்; அதன் சிதாகாச வெளியில் அருட்பெருஞ் ஜோதியப்பன், உலக லீலையை வகிக்கும் நடன சிகாமணி, இன்னும் ஞான நடம் புரிந்து அன்பர்க்கருளுங் காட்சி புலனாகும். பதஞ்சலி, வியாக்ர பாதர், உபமன்யு, திருவுடை யந்தணர், வியாசர், சுகர், சௌனகர், ஜைமினி, சூதர் முதலிய முனிவர் கூட்டம் காணும்; திருமூலர், மணிவாசகர், திருநீலகண்டர், நந்தனார், சேக்கிழார், முதலிய தெய்வத் தமிழ்ப் பெரியோரின் அன்புக்கனலும், இன்பத் திருப் பாடல்களும் முத்திப் பெருமையும் பரமானந்தமளிக்கும். ஞானசம்பந்தரும், அப்பரும், சுந்தரரும் பாடிய தேவாரங்களில் உள்ளஞ் சிலிர்க்கும்.

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே!

என்று உள்ளம் வியக்கும். உள்ளத் திருக்கோயிலில் ஞானாகாசம் தோன்றும்; சிற்சபை யொளிரும்; துரிய நடராஜனின் ஆனந்தத் தாண்டவக் காட்சியால் கண்ணிலும் கருத்திலும் பேரின்பப் பெருக்கு பெருவூற்றெடுக்கும். ஆறனைத்தும் புகுங் கடல்போற் சமயகோடிகள் அனைத்தும் அந்தத் திருச் சிற்றம்பல வெளியிற் சரண் புகுந்து அல்லலொழியும். எச் சமயமும், சமயபேதங் கடந்து வணங்கும் இயற்பொருளே



இந்த ஞான சிற்சபையின்கண் பேரின்பமயமான நடராஜ மூர்த்தியாக விளங்குகிறது! அவ்வொப்பற்ற வேத வடிவு ஓவியக் காவியமே!

"பேதமுறு மெய்ப்போத வடிவ மாகிப்
பெருங்கருணை நிறம்பழுத்துச் சாந்தம் பொங்கிச்
சீதமிகுந் தருள்கனிந்து கனிந்து மாறுச்
சின்மயமாய் நின்மலமே மணந்து நீங்கா
ஆதரவோ டியன்மௌனச் சுவைமேன் மேற்கொண்
டானந்த ரசமொழுகி யன்பா லென்றுஞ்
சேதமுறு தறிஞருளந் தித்தித் தோங்குஞ்
செழும்புனிதக் கொழுங்கனியே தேவதேவே!"

என்றும், நமது ஆர்வம் வாய்விட்டு அலறுகின்றது! அம்பலத்தரசே! அருமருந்தே! ஆனந்த விண்ணே! சற்குரு மணியே! மனமாயையாகிய முயலகனை யமுத்தி மிதித்து நசுக்காய்! மான்போல் துள்ளும் மனத்தை யடக்காய்! துரியந்தன்னில் தூக்கிய திருவடியால் என்னைக் காவாய்! மனதின் கனவொழிந்து துரியங்கடந்த ஞானானந்த மருளாய்! ஐயனே என் அப்பனே! நீயே யனைத்தும்! ஐந்தொழிலும் நின் ஆடலே! நினது டமரகநாதம், சப்த ப்ரம்மம், உலகின் காரணம்; ஓங்காரத்தால் உலகைப் படைத்தோய், ஞான குருவே, ஞானக் கனலை இடக்கரந் தாங்கினை; அக்கனலில் எனது மனமாயை, சஞ்சலம், இருள், பொய், அகந்தை, துயர், இடும்பை, ஐயம், அச்சம் எல்லாம் அழிக! நினது நித்திய, உபசாந்தக் கரங்களால் என்னை ஆசீர்வதிப்பாய்! அஞ்சலிக்கரத்தால் அச்சந் தீராய்! என் அன்பிற் கலந் தொளிரும் அருளமுதே! நினது கிரியா சக்தியான கங்கை இந்த வரண்ட வனுந்தர வாழ்வை நீ பயிலும் இன்ப் விண்ணகச் சோலையாக்குக! ஆத்மானந்தமாகிய சந்திரன்

என் உள்ளத்தில் உதயமாகி, எனது இருளை விழுங்குக! தலைவனே, எனது அகந்தைப் புலியைக் கிழித்து, அதன் உரியை நீ யணி. எனது மமதை மதயானையை யுரித்துப் போர்வையணி! பாச வெறிகளும், வீரியத் தினவுகளும் எரிந்து சாம்பலான என் யாக்கைத்-தில்லை-வனத்தில், எனது இதய சிற்சபையில் சச்சிதானந்தத் திருநடம் புரிவாயாக! அப்பனே!

போங்குபல சமயமெனும் நதிக ளெல்லாம்
புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி யோங்கும்
கங்குகரை காணாத கடலே யெங்குங்
கண்ணாகக் காண்கின்ற கதியே, அன்பர்
தங்கநிழல் பரப்பிமயற் சோடை யெல்லாந்
தணிக்கின்ற தருவேபூந் தடமே ஞானச்
செங்குமுத மலரவரு மதியே யெல்லாஞ்
செய்யவல்ல கடவுளே தேவ தேவே!"

என்று, மனமுருகும் அத்திருச் சந்நிதியில் இன்னொரு புதுமை!

அன்பர் குழாம் தேவார திருவாசகம் முழங்குகின்றனர்.

அரைசே பொன்னம் பலத்தாடும்
அமுதே! யென்றுன் னருணோக்கி,
இரைதேர் கொக்கொத் திரவுபக
லேசற் றிருந்தே வேசற்றேன்;
கரைசே ரடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துன் னடியேன்பாற்
பிரைசேர் பாலி னெய்போலப்
பேசா திருந்தால் ஏசாரோ!

என்று உள்ளுருகும் அன்பரிடையே ஒரு மெய்யன்பர் உள்ளுருகி நிற்கிறார். உடலரும்பி விதிர் விதிர்த்து, கண்

ணீர் ததும்பி, உள்ளம் வெதும்பி அம்பலவாணனை, அடியார்க் கெளியனை, அன்பினிலூறும் ஆனந்தத் தேனை, அருட்சுடர் வடிவை, ஐந்தொழிற்கரசை எண்ணித் தன்னை மறந்து அதோ நிற்கும் அன்பரே நமது இராமைய பிள்ளை. அவர் கையில் ஒரு பொன்னார் பச்சிளங்கனி மின்னுகிறது! கடவுள முதை உருச்செய்ததன்ன கருணை வடிவம்; அருள் மண மலரிற் கனிந்த அற்புதக் கற்பகக் கனியாகிய அச்சேயின் அழகு, எழில், முல்லைபோன்ற முறுவல், செஞ்சுடர் முகம், பிஞ்சிளந்திரு, காந்த விழிகளிலேயே நமது கண் பாய் கின்றது. இராமைய பிள்ளை தன் மனைவி சின்னம்மை யாருடனும், சபாபதி, பரசுராமன், சுந்தரம்மாள், உண்ணுமுலை ஆகிய நான்கு மக்களுடனும் இன்று நடராஜ தரிசனத்திற்கு வந்திருக்கிறார். அவர் கரத்தில் ஏந்தி அனைவர் அன்பையும் ஈர்க்கும் அரும் புதல்வனே சிவனருளாற் சின்னம்மைக்கு வாய்ந்து உலகுய்ய வந்த நமது இராமலிங்கப் பெருமான். பெரியார் அப்பைய தீக்ஷிதர் நடராஜப் பெருமானுக்கு அர்ச்சனை செய்து கற்பூரங் காட்டுகிறார். "ஹரஹர மஹா தேவ! சிற்சபேசா! சிவ சிதம்பரம்!" என்று அன்பர் தொழுது, புகழ்ந்து ஆர்வங்கூறி நிற்கும் ஆனந்தக் காட்சிக் கிடையே, அப்பொன்னம்பலச் சபையில் மிளிரும் மாணிக்கம் போன்ற நமது இராமலிங்கம் பிள்ளையார் என்ன செய்கிறார்? சிவகாமி மணாளன், கனகசபேசன், ஆனந்த நடன சிகா மணியைத் தனது காந்த விழியால் இமையாது குறித்து அவருடைய அருள் முகத்தின் முன் ஆடும் கற்பூரச்சுடரைக் கண்டு அருளானந்தம் பொங்கி நகை கொப்புளிக்கிறார்! என்னே! தனது ஊன்றந்தையின் கரத்திலிருந்துகொண்டு தனது உண்மையுயிர்த் தந்தையையே புதல்வன் நோக்கி யுள்ளுறவு பேணுகின்றனன்! அவ்வூன்றிய ஒரு மன நாட் டம் அருள்ஞான சம்பந்தக் குறிப்பேயன்றோ!

தந்தையைக் கண்டேனுன்; சாகா வரம்பெற்றேன்;
சிந்தை களித்தேனேன் றுந்தீபற;
சித்தெல்லாம் வல்லேனேன் றுந்தீபற!

*என்று தனது ஆன்மத் தந்தையுடன் ஞான வுறவாடி அறிவுத் தேனுண்டு களித்து நகைத்தாரோ!*

அன்பருளக் கோயிலிலே அமர்ந்தருளும் பதியே,
அம்பலத்தி லாடுகின்ற ஆனந்த நிதியே!
வன்பருளத் தேமறைந்து வழங்குமொளி மணியே!
மறைமுடியா கமமுடியின் வயங்குகின்ற மதியே;
என்பருவங் குறியாம லென்னைவலிந் தாட்கொண்
டின்பநிலை தனையளித்த என்னறிவுக் கறிவே!
முன்பருவம் பின்பருவங் கண்டருளிச் செய்யு
முறைமைநின தருணெறிக்கு மொழிதலறிந்
[திலனே!
அந்தோவீ ததிசயமீ ததிசயமேன் புகல்வேன்—
அறிவறியாச் சிறியேனை அறிவறியச் செய்தே,
இந்தோங்கு சடைமணிநின் அடிமுடியுங் காட்டி;
இதுகாட்டி யதுகாட்டி யென்னிலையுங் காட்டிச்
சந்தோட சித்தர்கடந் தனிச்சூதுங் காட்டி,
சாகாத நிலைகாட்டிச் சகசநிலை காட்டி,
வந்தோடு நிகர் மனம்போய்க் கரைந்தவிடங் காட்டி
மகிழ்வித்தாய் நின்னருளின் வண்மையெவர்க்
[குளதே!

*என்று மழலைப் பருவத்திற்றானே தனது தனிக் கருணைத் தந்தையை உள்ளெண்ணி உருகுகின்றாரோ! அந்த ஞான சம்பந்தக் களிப்பால் அருணகை பூத்தாரோ! கற்பூர தீபா ராதனை செய்யும் அப்பைய தீக்ஷிதருக்கே அத்திருவருட் குறிப்பு குறிப்பாயது; வியந்தார்:* “ இக்குழந்தை அம்பல

வாணரின் அருட் குழந்தையே " என்று போற்றி வாழ்த்தித் தமது மனைக்குப் பிள்ளையவர்களைக் குடும்பத்துடன் அழைத்துச்சென்று இருத்தி அருத்தி விடைகொடுத்தனுப்பினர்.

## உ. அருட் குழந்தை.

---

இம்மட்டோ! இத்திருவருட் சேய் அவதரித்தபோதே உலகன்னை உளஞ் சிலிர்த்து முகவளத்தில் புதிய முறுவல் காந்தினள்! ஆனால் இச்சேயின் பிறப்பும் மற்றச் சேய்களின் பிறப்புப் போன்றிலதோ? அதிலும் அற்புதம்—கூறுதும்!

இராமைய பிள்ளை கல்விச்செல்வர். கைமுகிற் செல்வர். சிவனை மறவாச் சிந்தனைச் செல்வர். நல்லறம் போற்றும் இல்லறச்செல்வர். சதா சிதம்பர நினைப்புடன் அதற்கடுத்த மருதூரில் அறநெறிப்பட்ட மனைவாழ்வு வாழ்வாங்கு வாழ்ந்து வந்தார். ஐந்து மனைவியர் தொடர்ந்து சிவபதம் பெறவே, ஆறுவது மனைவியாக ஆறு அமுதனைய அழகுச் செல்வி, கற்புக் கற்பகம், தூய துணைவி, சிவநேசச் செல்வி, பொன்னேரிச் சின்னம்மை யெனும் பொன்னியைத் திருமணஞ் செய்து, அன்பும் அறமும் அரனடி நேயமும் தூய வொழுக்கமும் தொண்டர் பணியும்பூண்டு,வந்தவைக்கொண்டு சிந்தையிலுவந்து, மனையறந் தாங்கி மாசற வாழ்ந்தார். கருணீகருல திலகரான இராமைய பிள்ளை கிராமக்கணக்கு வரைவது, தமிழ்க்கல்வி பயிற்றுவது ஆகிய இரு தொழில்களாலெய்திய வருவாயைக் கொண்டு நிறைவெய்தி வந்தார். அழகம்மை நல்ல குணமணி, நாணுடுத்த நல்லாள், அகமும் முகமும் அழகி; கற்பும் பொற்பும் கடவுளன்பும் நாயகன் பணியில் நேயமுங் கருத்தும் அடிசிற்கினிமையும், இரக்கம், அடக்கம், இன்சொல், ஈகை, ஒண்மை, மென்மை, ஒழுக்கம்

முதலிய நறுங்குணங்களுங் கமழும் நிறைமலர்க் கொம்பன்னாள்.

இத்தகைய நற்குண மணியுடன் பொன்னம்பலன் அன்பு பொலியும் இராமைய பிள்ளை காத்த மங்கல மனையறத்திற்கு நன்கலமாக நான்கு செல்வர் தோன்றினர்: சபாபதி, பரசுராமன் என்னும் புதல்வர்; சுந்தரம்மாள், உண்ணமுலை யென்னும் புதல்வியர். இவ்வாறு இன்பக்கனி பழுத்த மனைவாழ்வு தழைத்து வருநாளில் ஒரு சம்பவம் நடந்தது:—

## சிவயோகி வரவு.

நண்பகல்; இராமைய பிள்ளை அலுவலாக வெளியே சென்றிருந்தார்; செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் சின்னம்மையார் திடீரென ஒரு முதிர்ந்த சிவயோகியைத் தம் மனைமுன் கண்டார். தூய வெண்ணீற்றுத் திருமேனி; தலையிலுங் கழுத்திலும் அக்கம்; புலியுரி யணிந்து, யோக தண்டந் தாங்கி, சிவ பஞ்சாட்சரத்திற் பழுத்த வுள்ளம் முகமலரில் காந்தும் அச்சிவத்தவக் கிழவரை வணங்கி வரவேற்று இனிது கூறி, மலரடி கழுவி, நன்மணையிருத்தி, நாண்மலர் தூவிப் பணிந்து போற்றிப் "பரமனுருவாய் எழுந்த பெரியோய், என்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடில்! தங்கள் புண்ணிய வரவால் புனிதமுற்றது! ஏழ் பிறப்பும் எம்மர புய்ந்தது! அடியேமை யாட்கொள்ள அருள் கொண்டுற்ற அரனே, யான் அன்பிற் படைக்கும் அருஞ்சுவை வழிபாட்டை ஏற்றருள்க!" என்று போற்றித் தலைவாழையிலை பரப்பி அறுசுவை யுண்டி அன்போடளித்தலும், அரனருளாளர் அகமகிழ்ந்து அமுதருந்தினர். அம்மையாரின் செம்மையும், பெண்மையும், அடியார் நேயமும், சிவப்பற்றும், அருங்குணப் பெருந்தகையுங் கண்டு பேரு

வகையடைந்து பெரிதும் புகழ்ந்து, வாழ்த்தித் திருநீற ளித்து, "அருங்குணவல்லியே, அடியார்க்கன்பே, அக மகிழ்ந்து முகமறிந்து விருந்திடும் அமுத சுரபியே, நினது புண்ணிய வாழ்வும், புனிதச் செயலும், அளவற்ற அன்பும், அருமையும், அரனடி நேயமும், அடியார் வணக்கமும் என் மனமகிழ்வைத் தூண்டின. இத்திரு நீறே யான் தரு கைம்மாறு! இதைப்பூசி யுட்கொள்வாயாக! அதன் பயனாக ஓர் கடவுட் புதல்வன் சுத்த சமரஸ ஸன்மார்க்கத் தந்தை யாகத் தோன்றி உலகில் அருளாடல்புரிவான்" என்று ஆசீர் வதித்து மறைந்தார் சிவயோகியார். அம்மை வணக்கமுடன் திருநீற்றை யேற்றுச் சிவசிந்தையுடன் அணிந்து உட் கொண்டு, தன்கொழுநன் வந்ததும் நிகழ்ந்ததை யுரைக்கவே, பிள்ளையவர்களும் திருவருட் செயலை வியந்து, இன்ப வெள்ளத்திற்றோய்ந்தார். சின்னம்மை வயிற்றில் அருட் சோதி புகுந்தது.

பத்துமாதம் அன்னை வயிற்றிற் கோயில்கொண்ட பொன்னம்பலக் குழந்தை உலகொளியைக் காணப்போகிற தருணம்- கலி 4925, சுபானு ஹு, தட்சணாயனம், மாரி காலம், புரட்டாசி மீ 21-உ ஞாயிற்றுக்கிழமை (5-10-1823) உதயாதி 29¾ நாழிகை, மீன லக்னம்; சித்திரை நட்சத்திரம் உச்சியினின்று புன்னகை பூத்தது. உலகை இடர்ப்படுத்தி வேற்றுமைக் கந்தலாக்கிய இருட்சாதி மதங்கள் தலை சுழன்றன. மனிதனின் ஆத்ம சுதந்திரத்தை அடிமைப் படுத்திய சாத்திரக் குப்பைகளும், கோத்திரப் பொய்களும், கலைக்கற்பனைகளும், விலையொழுக்கங்களும், அகங்கறுத்து முகமினுக்கும் போலி யாசாரங்களும், ஆடிக்காற்றில் தூசி போலப் பறந்து தவித்தன! நிலமகள் சுதந்திரப் புன்னகை புரிந்தாள். உலகெலாம் ஓர் இன்பச் சிலிர்ப்பெடுத்தது. பாரததேவி சமரஸப் புதுயுக வாயிலில் அத்யாத்மத் திறவு

கோலேந்தி நின்றனள். தயானந்தர், பரமஹம்ஸர்போன்ற அருள் மலர் பூத்து புதுயுகச் சோலை மணங் கமழ்கிறது. அப்போதே நமது அருந்தமிழ் செய்த பெருந்தவப் பயனாய், தமிழருக்குப் புது வழி காட்டித் தமிழகத்தைப் புதுயுகவுலகின் சுடர் முகமாக்கி, உலகில் அருள்நெறி நாட்டி மனித மரபையே உய்விக்க, உலகிற்படர்ந்த இருட்குலத்தை விழுங்கும் பொலி நகை காந்தி அருட்சோதி யுதித்தது— வள்ளற் பெருமான் திருவவதரித்தார். ஈன்ற பொழுதே சான்றோனைக் கண்ட தாயுந் தந்தையும் மகிழ்ந்தனர்; அடியார்க் கமுதிட்டனர்; திருவிழாக் கொழித்தனர்; பெரியோர்கள் இவ்வரும் புதல்வனை வாழ்த்தினர்; கண்ட பெரியோர் இவன் கடவுள் மைந்தனென்று போற்றினர். குருவருள் கொடுத்த திருவருள் மைந்தனுக்குப் பெரியோர் தேர்ந்தெடுத்து, இறைவனைப் போற்றி "இராமலிங்கம்" என்னும் இன்பப் பேரைச் சூட்டினர். இராமலிங்கத்தின் இராசிச்சக்கரம் அடியில் வருமாறு:—

## திருவருட் பிரகாசர் ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| ல | | சனி | குரு |
| | இராசி | | அங் கேது |
| ரா | | | |
| | | புதன் சந் | சுக் சூரி |

இந்த ஜாதகத்தை ஓர் அன்பர் கணித்து அடியில் வருமாறு பலன் குறித்துள்ளார்:—

உதயம் மீனலக்னம், நாலில் குரு; எட்டாவது வீட்டில் புதனும் சந்திரனும். செவ்வாய், துலாத்தில். சுக்ர னும் சூரியனும் ஏழாமிடத்தில். இந்த ஜாதகமுடையோன் சிரஞ்சீவி; இவன் உயிர் போவதில்லை. உலகனைத்தும் வள்ள லாய் வாழுவான்: தைரியவான். கனதனங் கருதான், சுழுத்தி நாட்டமுடையான்; உலகுயிரின் பால் பேரிரக்கங்கொண்ட வன். பத்தாவது ஆண்டில் ஒன்றிற் காதலனுவான். கற்பமும், உலகைத் திருத்தும் குணமும் சக்தியாலுணர்வான். முப்ப தாம் ஆண்டில் பிறப்பிறப்பற்ற நிலையடைவான். 40-ம் ஆண்டிற் கைவல்ய ஞானம் பெறுவான். ஞானசித்தியால் 50ல் பொன்னுடலாகிப் பொலிவான். எவன் ஞானவுட லெடுத்தானே அவனே பெரியோன். மந்திரம், யோகம், வைத்தியம், வாதம், நூல் நுணுக்கம் சிந்தையில் எண்ணிய வுடனே யெய்துவான். இவ்வாறு கணிகள் ஐயனின் நாளையுங் கோளையுங் குறித்து தெய்வப் புதல்வன் திருவவதரித்தான் என்றனர். மருதூர் முழுதும் இக் குழந்தையின் பேச்சே. என்? அன்று முதல் ஊர் செழித்தது; பயிர் செழித்தது; இன்பஞ் செழித்தது. மக்கள் உள்ளஞ் செழித்தது; ஒற்றுமை செழித்தது. இக்குழந்தை யின் பெருமையே செழுந்திரு விளைத்ததெனை மகிழ்ந்து ஊரரெல்லாம் பேரன்புற்று இராமலிங்கத்தைப் பாராட்டிச் சீராட்டி வந்தனர்.

## சென்னை செல்லல்.

உலக வாழ்வு இன்பதுன்பமென்னும் மேடு பள்ளங்கள் மேவியது. குலவிளக்கான அருள் விளக்கு மைந்தனின் இன்பம் நிறைந்த அம்மங்கல மனை வாழ்வில் மங்குல் படர்ந்தது! இராமைய பிள்ளை சிவனடி சேர்ந்தார்; குடும்பம் இடருற்றது. வந்த விதியை நொந்தென்! சிவன் செயலென்று

மனதாறிச் சின்னம்மை மக்களுடன் தனது பிறப்பிடமான பொன்னேரியில் தன் அன்னையின் காப்பிற் சின்னாளிருந் தாள். பிறகு குடும்பம் மூத்தமகன் சபாபதியுடன் சென்னை யிற் குடியேறியது. அங்கு சபாபதி, அரிய தமிழ் வாண ரான காஞ்சி சபாபதி முதலியாரிடம் முறையாக முத்தமிழ் பயின்று வித்தையிற்றேறித் தமிழாசிரியராகவும், சிவ புராண விரிவுரையாளராகவும் தொழில் நடத்தி, வந்ததைக் கொண்டு குடும்பத்தைத் தாங்கி வந்தார். பெரிய புராண பிரசங்கத்தில் அவர் பெயர் பெற்றோங்கிப் பல செல்வரின் ஆதரவையடைந்தார்.

## ௩. ஓதா துணர்ந்த மூதறிவாளன்.

---

நமது பெருமானுக்கு ஐந்தாண்டானது; முழுமுதற் றந்தையருளால் முற்றறிவு முற்றி வந்த இயற்கை ஞான வள்ளலுக்கு வீட்டிலுள்ளோர் கற்றறிவு புகட்டத் தொடங்கி னர். கல்வி தொடங்கியதும், தமையனார் சபாபதி பிள்ளையே தமது இளவலுக்குக் கண்ணுங் கருத்துமாக மொழி யரசாகிய தமிழ் மொழி பயிற்றினர். தம்பியைத் தக்க புலவனாக்க மிக்க ஆவல்கொண்டு, முறையாக நிகண்டு, சதகம், அந்தாதி, நன்னூல் முதலிய நூல்களைக் கற்பிக்கலானார். ஆனால் நமது அருளறிவாளன் இப்புத்தகப் படிப்பிற் கருத் தூன்றுவதில்லை. இது கண்ட அண்ணல் தம்மிடமின்றேல், தமது ஆசிரியர் சபாபதி முதலியாரிடமாவது ஒழுங்காகப் படிப்பானென்றெண்ணி ஏற்பாடு செய்தார். அங்கும் மேற் படியே; மனம் வேறுபட்டிருந்தார் நமது இயற்புலவர். "படிப்பில் கவனமில்லை; குறிப்பின்றிச் சுற்றுகிறானே;

இவன் எப்படி முன்னேறப் போகிறான்'' என்று அண்ணல் வருந்தினார். நமது பிள்ளையாரின் உள்ளே வளரும் அருட் புலவன் அவர்களுடைய புற விழிகளுக்குப் புலப்படவில்லை. நமது பிள்ளையார் செய்ததென்ன? தானே தனது சத்திய விண்ணப்பத்தில் விளக்குகிறார்:—

"இயற்கை யுண்மைக் கடவுளே! அறிவார் அறியும் வண்ணங்களெல்லாமுடைய பேருட் சோதிப் பெருந்தகைக் கடவுளே! குமாரப் பருவத்திற்றானே, உலகிற் சிறுவர்களு டன் கூடிச் சிறு விளையாட்டியற்றல், சிற்றுண்டி விழைதல், அதிசயம் பார்த்தல், அசங்கியம் பேசல், ஆவலித்தழுதல், சிறு சண்டை செய்தல், சிறு குறும்பியற்றல், தன் வசத் துழலல், தாய் வயிற் சலித்தல் முதலிய குற்றங்களில் என்னைச் சிறிதுஞ் செலுத்தாமல், ஓர் சிறிது அறிவு விளங்கப் புரிந்து, இடந்தனித்திருத்தல், இச்சையின்றி நுகர்தல், ஜபதபஞ் செய்தல், தெய்வம் பரவல், பிறவுயிர்க்கிரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப் பணிதல், பத்திசெய்திருத்தல் முதலிய நற் செய்கைகளில், என்னைச் செலுத்திய தேவரீரது பேரருட் பெருங் கருணைத் திறத்தை என்னென்று கருதி என்னென்று உரைப்பேன்! எல்லாமானவராயும், ஒன்றுமல்லாதவராயும், எல்லா அண்ட சராசரங்களின் அகத்தும் புறத்தும் நிறைந்து விளங்குகின்ற தனித் தலைமைக் கடவுளே! குமாரப் பருவத் தில், என்னைக் கல்வியிற் பயிற்றும் ஆசிரியரை யின்றியே, என்றிறத்திற் பயின்றறிதற் கருமையாகிய கல்விப் பயிற்சியை எனது உள்ளகத்தே யிருந்து பயிற்றுவித் தருளினீர். இடம் பத்தையும் ஆரவாரத்தையும் பிரயாசையையும், பெரு மறைப்பையும், போது போக்கையும் உண்டுபண்ணுகிற ஆரிய முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்லவொட் டாது, பயிலுதற்கும், அறிதற்கும், மிகவும் இலேசுடைய தாய், பாடுதற்கும், துதித்தற்கும் மிகவும் இனிமையுடைய

தாய் சாகாக்கல்வியையிலேசில் அறிவிப்பதாய்த் திருவருள் வலத்தாற் கிடைத்த தேன்மொழி ஒன்றனிடத்தே மனம் பற்றச்செய்து, அத்தென்மொழியாற் பலவகைத் தோத்திரப் பாட்டுகளைப் பாடுவித்தருளினீர். அச்சிறு பருவத்திற்றானே ஜாதியாசாரம் ஆசிரம ஆசாரம் என்னும் பொய்யுலகாசாரத்தைப் பொய்யென்றறிவித்து, அவைகளை அனுட்டியாமற் றடைசெய்வித்து, அப்பருவம் ஏறுந்தோறும், எனதறிவை விளக்கஞ்செய்து என்னை மேனிலையில் ஏற்றி ஏற்றி நிலைக்க வைத்தருளினீர்''—

இதுதான் நமது பெருமானின் பிள்ளைப் பருவக் கதை. தமது ஒன்பதாவது வயதிலேயே அவர் அகத்தியர் முதலான முனிவர் பாடல்களை ஓதாமலே பாடும் வளம் பெற்றிருந்தார். முறையாகப் பாடம் படிக்கவில்லையென்று வீட்டார் குறை சொல்லுகையில் நமது இளம்பிரான் புரிந்துவந்ததென்னே! அவர்கள் குறை சொல்லுகிறார்களென்று முணுமுணுத்தாரா? அவமதித்தாரா? தளர்ந்தாரா? இல்லை. தன்னுள் ஆண்டவன் தூண்டிப் பொலிவித்த அருளறிவில் உறுதிகொண்டார். மற்றவர்களைப் போலக் கற்று, மற்றவர் போல வாழ்வை வயிற்றிற் கிரையாக்கவோ அவர் பிறந்தார்! அருளால் ஆருயிர் மக்களுக்கு அருள் நெறி விளக்கித் தனது இனிய அருட் பாஊற்றை யாழுங் குழலும் அமுதுங் கைக்கும்படியான தமிழிசையுடன் அகண்ட சுத்த சிவ சமரஸ சன்மார்க்க நதியாகப் பாய்ச்சி உலகில் ஆன்மநேய ஒருப்பாட்டுரிமையை நாட்டவன்றோ அவர் அவதரித்தார்! ஆதலின் இயல்பிலேயே தனது வாழ்வின் அருட்பணியில் கருத்தை நாட்டினார். செந்தமிழ்த் தெய்வம், தகப்பன்சாமி, குகன், முருகனை வழிபடு கடவுளாகக்கொண்டு, அன்பாலுருகி இன்பப் பாமாலை தொடுத்து மனமாற அணிவித்துவந்தார். மாலைதோறும் கந்தப்பெருமான் கோயிலில்

ஆர்வக்கனலிற் பரவசம் பொங்கித் ததும்பும் பாமாலை புனைந்து வழிபடும் நமது குமரனைக் காணலாம். நமது அருட்பெருஞ் செல்வர் முருகனைப் பலவகையால் மனமுருகி வழுத்திவந்த அருமையை ஐந்தாந் திருமுறையிற் காணலாம். கலியுக வரதனான முருகப் பெருமானிடம் நமது இளங் குமரன் உருகி வேண்டியதென்ன?:—

"தேசிக சிகாரத்னமே! நின்பதம் எனது உளத் தோங்கின் திருவும், நற்செயலும், திறனும், இன்பமும் ஓங்கும். வள்ளலே, உன் அன்பர் கூட்டத்தில் என்னைச் சேர்! என் தந்தையே, தாயே, என் அறிவே, என் இன்பமே, காமம், வெகுளி, லோபம், மோகம், மதம், ஆங்காரம், மச்சரம், முதலிய தீயர் என்னை அணுகாதருள்க. நிராசை, சாந்தம், உதாரம், சுத்த மனம், அலைவற்ற சிவஞானம் இவற்றை அளித்தருள்.

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகல வாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும்; பொய்மை
பேசா திருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டுமத மானபேய்
பிடியா திருக்க வேண்டும்
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டும்; உனை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும்; நோயற்ற
வாழ்வினான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
ஷண்முகத் தெய்வ மணியே!

நான் ஒருவரிடம் ஈயெனக் கேட்காது, கேட்டவர்க்கு இல்லையென்று சொல்லாதிருக்க வேண்டும். பிறர் பொருளை நயக்கக்கூடாது; பிறரைத் தீங்கு சொல்லாத்தெளிவும், உன் புகழ் பேசுவோர் உறவும் தருவாய்! அப்பனே நின் சீர் பேசும்வாய் ்தெள்ளமுத முண்டுவந்த திருவாய்! நின்பதங் கருதும் நெஞ்சே சுகரூபமானது. கந்தவேளே! என் உள மும் வசமில்லை; வினையும் விடவில்லை; உன் துணையின்றி உற்ற துணையில்லை; இளையன், இவனுக்கு அருளவேண்டு மென்று உன்பால் இசைப்போருமில்லை; ஏழையேனுக்கு நீ அருள் புரிந்தால் எதிர்நின்று தடுப்போருமில்லை; இரப் போருக்கு நீ இல்லையென்பதுமில்லை; உன் அருள் குறைவது மில்லை; நீ வன்மனத்தவனுமில்லை; என் உயிர்க்குயிரே! எத்திக்குந் தித்திக்கும் இன்பமே, ஆனந்த போகமே, யோகமே, ஏகமே, முத்தி முதலே, மெய்ஞ்ஞான மூர்த்தி யே! உன் அடியலாற் பிறரை நாடா விரதமே கொண்டேன். நின்னடி நம்பினோர் அவலப்படுவரோ?

வன்பெருநே ருப்பினைப் புன்புழுப் பற்றுமோ
வானையொரு மான்தாவுமோ
வலியுள்ள புலியையோர் எலிசீறு மோபெரிய
மலையையோர் ஈச்சிறகினால்
துன்புற அசைக்குமோ? வச்சிரத் தூணொரு
துரும்பினாற் றுண்ட மாமோ?
சூரியனை யிருள்வந்து சூழுமோ? காற்றின் மழை
தோயுமோ? இல்லை யதுபோல்,
அன்புடைய நின்னடியர் பொன்னடியை
[யுன்னுமவர்
அடிமலர் முடிக் கணிந்தோர்க்
கவலமுறு மோகாமம் வெகுளியுறு மோமனத்
தற்பமும் விகற்ப முறுமோ!

தன்புகழ்சேய் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தேய்வ மணியே''

இவ்வாறு முருகனை வழுத்தி வழிபட்டு வந்த நமது அன்புப் பெருமான் உட்கனிவை யாரே காண்பார்? கற்கு முன் கவி பொழியும் இக்காள மேகத்தைக் கண்டார் சபாபதி பண்டிதர்; குட்டுதற்குப் பிள்ளைப் பாண்டியனில்லை; குறடுகொண்டு காதை வெட்டுதற்கு வில்லியில்லை; இந்த வயதில் கற்குமுன் கவி பாடுவதாவது என்று கனன்றார்; எம்பிரானின் இனிய அருள் வாக்கினின்றரும்பும் தெய்வ மலர்களை அவர் கண்ணாரக் கண்டாரெனினும், அதன் நறு மணத்தை இன்புற நுகராது......"எடுக்கு முன் இப்படிக் கவி தொடுப்போன், மேலும் இலக்கண இலக்கியம் தேர்ந் தால் நம்மை மிஞ்சிவிடுவான்'' என்று பாடஞ் சொல்வதையே நிறுத்திவிட்டார். பண்டிதனறிவனோ பழுத்த நல்லருளை! அவர் பாடம் நமது இயற்கைப் புலவருக்கு வேண்டியது மில்லை; அதைக் கற்காததால் நமது கடவுட் பிள்ளையின் அருளூற்று தடைப்படப் போவதுமில்லை. தேனும் பாலும், அமுதங் கனிரசமுந் தெவிட்ட முருகன் நமது திருமக னுள்ளிருந்து அருட்கவி யமுதூற்றைப் பெருக்குகின்றான்! ஞானச்சுடர் தூண்டுகின்றான்! அதுவே கல்வி, சாகாக் கலை; இவ்வருளின்ப விருந்தை யுண்டவனுக்கு ஏட்டுக் கல்வி எம்மாத்திரம்! எம்பெருமானின் அருட் பெருமையை அண் ணல் சபாபதி பிள்ளையும் அறிய முடிந்திலர். "ஐயோ, தம்பி வீணாகிறானே! படிப்புமில்லை; பயனுமில்லை; குடி கெட்டது'' என்று கவன்றார். தம்பி தனக்கிசையாது வேறு மனப்போக்காகி எதிலோ சித்தம் வைத்தாழ் திருப் பதை அறியாது முனிந்தார். குறை கூறினர்; படித்

துரைத்தார்; இடித்துரைத்தார்; ஒன்றும் பலிக்காது அலுத்து வெறுத்து முடிவில் தமது மனைவியை அழைத்து, "இராமலிங்கம் படியான்; என் சொற் படியான்; வீண் போதுபோக்கித் திரிகின்றான்; ஆதலால் அவனுக்கு வீட்டில் உணவு, உடை, இடம் எதுவும் தரக்கூடாது" என்று சட்டஞ் செய்தார். அண்ணியார் கற்பிற் சிறந்த வாசுகி; கணவன் சொல்லைத் தடுக்காதிருப்பினும், எம்பிரான் மீது மிகவும் அன்புடையவர் ஆதலால் பிள்ளையை அனுதரவாய் விட்டுவிட மனங் கொள்ளாராகிக் கணவனுக்குத் தெரியாமல் அவரை ஊட்டி வந்தார். தனது அண்ணன் வீட்டிலில்லாத வேளை அல்லது அயர்ந்திருக்கும் சமயம் இராமலிங்கப் பெருமான் புழைக்கடை வழியாக வருவார்; அப்போது அண்ணியார் தாயினும் பரிவுடன் மனங் குழைந்து, ஊணருத்தி, உடையளித்து, மருந்தினும் இனிய திருந்துமொழி கூறிவந்தார். இப்படிப் பன்னாட்கள் கழிந்தும் பையன் உள்ளபடியே யிருந்தான்; தன் வழியே பற்றி நின்றான். இவ்வாறிருக்கையில் தாயார் திவசம் வந்தது. அதை வழக்கம்போல் சபாபதி பிள்ளை பலவகைச் சிறப்புகளுடன் நடத்தினார். உற்றார், உறவினர், மற்றோர்களுக்கு வேண்டிய நல் விருந்தருத்தினார். விருந்தினர் எல்லாரும் உண்டு மகிழ்ந்து பரிமள களபம் பூசி இன்புற்றிருந்தனர். சபாபதி பிள்ளையும் தம்பியை நினைந்து உடனிருந்துண்பதற்கில்லையேயென்று வருந்தினார். அண்ணியார் விருந்தினரை முகமலர்ந்து உபசரித்துக் காரியம் முடிந்தபின் மைத்துனச் சிறுவனையெண்ணி வாட்டமுற்றவராய் உணவு பிடிக்காது சோர்ந்திருந்தார். சபாபதியும் கண்ணயர்ந்தார். மணி நான்கானது. நமது பெருமானார் வீட்டின் பின்புறம் மெல்லப் புகுந்தார். அண்ணியார் ஆவலோடு பிள்ளைப் பெருமானை ஏற்று, அலர்ந்த சோற்றை ஊட்டினார். அதை

யும் பொறுமையுடன் உண்ணும் எம்பிரானை நோக்கி அண்ணி யார், "அந்தோ எத்தனையோ பேர் இன்ப விருந்தருந்தி மகிழ்ந்தனர். இன்று வீட்டிற்குரிய நம்பி இவ்வாறு கள்ளத் தனமாக வந்து பதனழிந்த சோற்றை யுண்ணல் விதியோ" எனக் கருணையங் கண்ணீர் ததும்ப, அண்ணான் வந்துவிடு வாரோ என்னும் அச்சத்தோடுண்ணும் பிள்ளையை நோக்கி னர். அண்ணியார் அன்புக் கண்ணீரைக் கண்டு எம்பிரான் தானும் விழி சோர்ந்து, "அண்ணி யன்னையே, என் அலமறு கின்றீர்" என மீண்டும் மீண்டும் வினவினர். "தம்பீ எத்தனை நாள் இப்படிக் காணுமல் வந்து உண்டுசெல்வது? அண்ணன் சொற்படி கல்வி கற்ருல் இவ்வளவு இடர் இல்லை யே. எனக்குப் பின் உன்னை யார் இவ்வளவு பரிவுடன் பேணுவர்? எனக்காகவாவது நீ கல்வியிற் கருத்தூன்ற வேண்டும்" என்ருர். அன்பு மொழிகள் ஐயனை இணக்கின. "அன்னையே தங்கள் மனங்கசிய யான் பொறேன். தங்கள் விருப்பப்படியே கல்வி கற்கிறேன். நாளைக்கே மேல் மாடி யில் ஒரு தனியறை அலகிட்டுத் தருக. அதில் யான் கல்வி பயில்கிறேன்." என்ருர் இயற்புலவர். அங்ஙனமே கொடுக் கப்பட்டது. அங்கு கல்வி கற்ருரா? இல்லை. பின்னே? முன் போலத்தான்! என்ன? ஒரு நிலைக்கண்ணுடி வாங்கி சுவரில் மாட்டினர். நறும்புகை போட்டார். மலர் சூட்டினர்; கதவை யடைத்துக்கொண்டு தன்னுள்ளே உள்ளபடியுள்ள அறிவு நூலை, முருகன் உள்ளே யுணர்த்த, ஓதாது ஓதலானர். கண்ணுடியையே கண் நாடிப் பார்த்திருந்தார்; அதில் தணிகை முருகன் இனிய வடிவு தோன்றியது; அதையே உபாசிக்கலானர். கந்தப்பெருமான் அருளால் எல்லாக் கலை யறிவும் வளர்பிறை போல உள்ளே வளர்ந்தது. புறத்தே யுள்ளவர்களுக்கெல்லாம் 'பையன் வீடு தங்கி நாளெல்லாம் படிக்கிருன்' என்ற மகிழ்வு. ஆனல் எந்நூல் கற்கிருன் என்பது மட்டும் எவருமறியார். தன்னுல் கற்கின் எந்நூல் வேண்டும்?

——

# ச. முருக உபாசனை.

சிவ ஷண்முக சிவஞான தேசிக முருகனை நமது வள்ளல் உருகிப் பணிந்து குறையிரந்து வழிபட்ட பாக்கள் கல்நெஞ்சையும் உருக்கும். அவற்றின் கருத்தை இங்கு வடித்தெடுப்பாம்:—

"அன்னே! எனைத் தந்த அப்பா! குமரா! பரம குருவே குகா! உன்னையே நினைந்தேங்கி அலறுகின்றேன்! கலாப மயில்மேல் வரும் அழகிய மாமணியே! வேற்கரனே! மலர் முகனே! வீரக்கழலே! புவிநடைச் சேற்றில் விழுந்து தியங்கும் என்னைக் கரையேற்றிய உனக்கே விழைவுகொண்டோலமிடுகின்றேன். துன்பக் கடல் மூழ்கி எடுத்து விடுவாரின்றி நெஞ்சங் கலங்குகின்றேன். என்னப்பா, கேளாது போலிருக்கின்றனையே! நவை மனம் மாய்ந்து, நின் அன்பர் அவை யணுகி, ஆனந்த வாரியில் ஆட வேண்டினேன். நின் தொழும்பர் திருப்பத மல்லால் சிற்றடியேன் இம்மண்ணிலே ஊரும், தனமும், உறவும், புகழும், மடவார் போகமும் வேண்டிலேன்! நின் கால் பிடித்தேன்! கருணை செய்வாய்!

ஊணே யுடையே பொருளேயென்
றுருகி மனது தமோறி
வீணே துயரத் தழுந்துகின்றேன்
வேறோர் துணைநின் னடியன்றிக்
காணேன்; அமுதே பெருங்கருணைக்
கடலே கனியே கரும்பேநற்
சேணோர் தணிகை மலே மருந்தே
தேனே ஞானச் செழுஞ்சுடரே!

பெருந் துயரால் வாடி யிளைத்தேன் எந்தாய்! அருட் கடலே! செல்வமே, கரும்பே, தேனே, செம்பாகே, கண்ணே, கற்பகமே, என் குல தெய்வமே! வேற்கை யரசே! மறைப்பொருளே! சாந்த குணக்குன்றே! பன்னிரு கண்ணோய்! மனங் கலங்கும் இவ்வேழைச் சேயைக் கண் பாரா யோ! நாளும் உன்னருள் வழி பார்த்து இளைக்கின்றேன்!

பண்ணேறு மொழி யடியார் பரவி வாழ்த்தும்
பாதமல ரழகினையிப் பாவி பார்க்கிற்
கண்ணேறு படுமென்றோ கனவி லேனுங்
காட்டென்றாற் காட்டுகிலாய் கருணை யீதோ?
விண்ணேறு மரிமுதலோர்க் கரியஞான
விளக்கேயென் கண்ணேமெய் வீட்டின் வித்தே,
தண்ணேறு பொழிற்றணிகை மணியே, ஜீவ
சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகச வாழ்வே!

வாவென்பா ரின்றியுன தன்ப ரென்னை
வஞ்சகனேன் றேமறுத்து வன்க ணுநீ
போவென்பா ராகிலெங்கு போவே னந்தோ!
போய்யனேன் றுணையின்றிப் புலம்பு கின்றேன்
கோவென்பார்க் கருள்தருமக் குன்றே, யோன்றே,
குணங்குறியற் றிடவருளுங் குருவே, வாழ்க்கை
தாவென்பார் புகழ்தணிகை மணியே, ஜீவ
சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகசவாழ்வே!

தாயறியாச் சூலுண்டோ! நீ யென் குறை அறியாயோ? பாவி மகனையும் அன்னை தள்ளுவளோ? வேறு கதியுண்டோ? வித்திலாது விளையும் வானின்பமே! பொய்யர் நெஞ்சில் நீ புகுவதில்லை! நான் பொய்யனேன்! நின் திருவருள் முன் அஞ்சி நிற்கின்றேன். பாலுடன் நீரென நின்னடிக்கலப்பில் வாழ அருள்! சின்மய வடிவமே!

உள்ள நெக்குவிட் டுருகு மன்பர்தந்
நள்ள கத்தினில் நடிக்குஞ் சோதியே!
தள்ள ருந்திறற் றணிகை யானந்த
வெள்ள மேமனம் விள்ளச் செய்வையே!

தற் பராபரமே! சற்குண மலையே! சரவண பவனே! வல்லிருட் பவந்தீர் மருந்தே! செஞ்சொற் சுவையே! மெய்ஞ் ஞானச் செல்வப் பெருக்கே! தெள்ளமுதே! சேவற்கொடி யோய்! சிந்தாமணியே! எய்தற்கரிய அருட்சுடரே! எல்லாம் வல்ல இறையோனே! ஞானச் செழுமணியே! அழியாப் பொருளே! என்னுயிரே! பரஞ் சுடரே! சுயஞ் சுடரே!

என்செய் கேனினுந் திருவருள் காண்கிலேன்
எடுக்கருந் துயருண்டேன்
கன்செய் பேய்மனக் கடையனே னென்னினுங்
காப்பதுன் கடனன்றே?
பொன்செய் குன்றமே பூரண ஞானமே
புராதனப் பொருள் வைப்பே!
மன்செய் மாணிக்க விளக்கமே தணிகைவாழ்
வள்ளலே மயிலோனே!

பாவியேன் தனியே உழல்கின்றேன்! நின் சேவடியைக் கண்ணாரக் கண்டு மனங் களிப்புறேனே! எனதென்பதை விடுத்து இவ்வகில மாயை முறியேனே! உடல் புளக முறே னே! மனமே! மூட முழு நெஞ்சே, பொன்னால் மண்ணால் பூவையரால் என் உயர்வைக் கெடுக்கின்றாய்! சவலை மனமே நீ சாகாயோ? இல்லதை நினைத்துப் பித்தர்போல் ஏங்கி நிற்கின்றாய்! என் குல தெய்வம், என் சற்குரு குகனருளே நல்லதென் றறியாது, நன்றி மறந்தாய்; நின் செயல் எனக்குத் திடுக்கிடுகின்றது! திருந்தாய் நெஞ்சே, குகனடி பொருந்தாய்! உமையா ளருட்பாலனே, சிற்சுக

வாரியே, வெளிப் பூச்சில் மயக்கிக் கண்வலை வீசி என் மனத்தை விலைகொள்ளும் காம வலையிற் சிக்கிக் காசம், மேகம், சூலை முதலிய கடும்பிணிக்காளாய் வருந்தாது, நின் நேசமே கொண்டு வாழ அருள்! மின்னார் போகத்தில் மயங்கி வெயிற் புழுப்போல் வாடாது பரமயோகியர், நல்லடியார் கூட்டத்திருக்க அருள்!

செய்கோள் தணிகை நாடேனோ
　　செவ்வேள் புகழைப் பாடேனோ
கைகள் கூப்பி ஆடேனோ
　　கருணைக் கடலி னீடேனோ
மெய்கோள் புளக மூடேனோ
　　மெய்யன் பர்பால் கூடேனோ
போய்கோள் உலகோ டேடேனோ
　　புவிமீ திருதாள் மாடேனே!

சிவயோகருள்ளம் நிகழ்கின்ற ஞான நிறைவே! அவ நாள் கழிக்க அறிவேன் அல்லாது, உன் அடிபேணி நிற்க அறியேன்! புவிச் சுமையா யிருக்கின்றேன்! ஏன் பிறந்தேன்! கரும்பு வெறுத்து, வேம்பருந்துங் காக்கை யன்னேன். இரும்பு போன்று கனியாத வன்னெஞ்சக் கள்வனேன்! அரும்பாய நகை மடவார்க்கு ஆளாய், வாளா அலைகின்றேன்; அறிவறியேன் உன் செம்பாத மலர் ஏத்தேன்! இலவு காத்தேன்! சொல்லி லடங்காத் துயரயற்றுந் துகள் சேர் சனனப் பெருவேரைக் கல்லி யெறிந்து, நின்னுருவைக் கண்களாரக் கண்டு கட்டித் தழுவேனோ! சைவக்கனியே, தற்பரமே! கருணைச் செங்கரும்பே! மெய்ஞ்ஞான வெளியே! பாழ்வினையேன் துன்பமெல்லாம் நீயறிவாய்! என் குறையை வேறெவர் பால் இயம்புகேன்! படுகாட்டிற் பலனுதவாப் புனையே போன்றேன்! என்னையே யான் சிரிக்கின்றேன்,
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

தாய்ப் பாலுண்ணுது நாய்ப்பாலுண்டேன்! பாலை நடுவே கருங்கல் போன்றேன்! பொன்னைப் பொருளா யிரந்தேன்-நின்னைப் பொருளென் றுணராத நீசனேன்! போதானந்தப் பரசிவத்திற் போந்த பொருளே! கொடியாரிடம் குறை யிரந்தேன்! நின்னன்றித் துணைகாணேன்! முறையோ, முறையோ! பழுதையைப் பாம்பென மயங்கினேன்! பொன் பெண் பிணிக்கும் வன் பிணிக்கோ என்னைப் பெற்று வளர்த்தாய்! இவ்வேழைக் கிரங்காயோ!

மனமே இரவும் பகலும் மயிலேறிய முருகன் றுதிசெய். தேரு மனமுந் தேறும்; துயர் மாறும்; மாருப்பிணி மாயும்; துயிலேறிய சோர்வு கெடும்; இடர்போம்; மையலார் மயக்கம் போம். இருள் மிடி நீங்கும்! மறைக்குளே மறைந்து, அம் மறைக்கரி தாகிய வள்ளலை உள்ளத்தே உன்னுய்! வேறு மாய நினைப்பின் மீளாய்! மாதர் புணர்ப்பாங் கான் வழி நடக்காதே! முருகன் கழல்வழி நட! உலக மயக்கற, மெய்மை யுணர்!

சிவ தருவில் அருள் பழுத்த செங்கனியே! எவையும் நாடாதே, என்னடி நிழலிரு என்று நீ ஏழைக் குரைக்கு நாள் என்றோ! அருவுருவாகுஞ் சிவபிரானளித்த அமுதே! நீயருள் செய்யாயேல் துன்புற்று மெலிவேன். என்னுயிரே, என்பேறே, என் பொருளே, குருவே அன்பருக் கெளிவரு மரசே, முத்திக்கு வித்தே, சுத்தனே, பத்தி வலைப்படுபவர் இடர்க் கடல் விடுத்தேற எத்தனை நாட் செல்லுமோ! ஓம் சிவஷண்முகா சரணம்!"

இவ்வாறு உருகி அழுதலறித் தவிக்கும் அன்பனுக்கு ஆறுமுகப் பெருமான் கருணை மலர்ந்து குரு வடிவாகத் தோன்றி, ஞான சக்தியும் சாகாக் கலையும் அருளினுர்.

முருகனைக் கண்ட பரமானந்தத்தில் நமது வள்ளற் பெருமான் உள்ள முருகும் உருக்கம் என்னே!

“சிவனார் மகனார், குகனார் என் முன் வந்தார்! புது வாழ்வு தந்தார்! தொழுவார், அழுவார், விழுவார், எழுவார், துதியா நிற்பவர் நிற்க, புழுவுட லோய்பும் என் முன்வந் தருளினாரே! பொன்னே விரும்பும் புல்லர் பாற் போகேன்! நின் பதமே போற்றும் வண்ணம் சின்னமளித்து அருட் குருவாய் என்னை முன்னே சிறுகாலே ஆண்டுகொண்ட தேவ தேவே!

கல்வியெலாங் கற்பித்தாய் நின்பால் நேயங்
காணவைத்தா யிவ்வுலகங் கான லென்றே
ஒல்லும்வகை யறிவித்தா யுள்ளே நின்றேன்
உடையானே நின்னருளு முதவு கின்றாய்!
இல்லையெனப் பிறர்பாற்சென் றிரவா வண்ணம்
ஏற்றமளித் தாய்இரக்க மென்னே யென்னே
செல்வவருட் குருவாகி நாயி னேனைச்
சிறுகாலே யாட்கொண்ட தேவ தேவே!

எந்தை நீ யிருக்க இனி யென்ன குறை! உலகிற் பிறரை ஒரு காசுக்கும் மதியாது, நின்னடியே மதிக்கின்றேன். அல்லும்பகலும் நின்னையே துதிக்கின்றேன்.

விண்ணுறு சுடரே யென்னுள்
விளங்கிய விளக்கே போற்றி!
கண்ணுறு மணியே யென்னைக்
கலந்தநற் களிப்பே போற்றி!
பண்ணுறு பயனே யென்னைப்
பணிவித்த மணியே போற்றி!
எண்ணுறு மடியார் தங்கட்
கினியதேள் ளமுதே போற்றி!

## சுப்ரமணிய விளக்கம்.

---

கந்த ரனுபூதி பெற்ற எம்பெருமான் சுப்பிரமணிய தத்துவத்தை அடியில் வருமாறு விளக்குகிறார்:—

சுப்பிரமணியம் என்பதென்ன? நமது புருவ மத்தியில் ஆறுபட்டையாய் உருட்சியுள்ள ஒரு மணி பிரகாசம் பொருந்தி யிருக்கிறது. இந்த ஜோதி மணியை ஷண்முக மென்று பெரியோர் சொல்லுவார்கள். இதன்றி நமது மூலா தாரத்திற்கு மேல் மூன்றிடங் தாண்டி விசுத்தியாகிய இருதய ஸ்தானத்தில், இடது புறத்தில், ஆறுதலை யுடைய ஒரு நாடி யிருக்கின்றது. இதை சுப்பிரமணிய மென்பார்கள். உன்மனிக்கப்பால் சாந்த நிறைவாயுள்ள, ஆறுதலான சுத்தான்ம அறிவான உள்ளமே சுப்பிரமணியம். ஆறு சோதி, ஆறறிவு. ஆறு தலை யுடையதா யிருப்பதால் ஆறு முகம். தோன்றும் அறிவு தோற்றுவிக்கும் அறிவு இரண்டாலாகிய விஷய நிர்விஷய உணர்வே இரண்டு கால். ஆறுதாரங்களிலுள்ள பிரகாச அப்பிரகாசமான பன்னி ரண்டும் கைகள். சக்தி, அருள், அறிவே வேல்; ஆன்ம விளக்கம் நாதம், மணி; கீர்த்தி கொடி; சரசிஜம் தயவு; குக் குடம் மாற்சரியமில்லா நிறைவு. பராகம் என்பது பாச நீக்கம்; தண்டம், வைராக்கியம்; பாணம் அன்பு; அபயம் சமாதான உணர்வு; மூலப் பிரகிருதியே மயில்; சர்வ தத்துவ கண்ட னம் கடப்ப மாலை. அசுத்த அகங்காரமே சூரபத்மா; அடங்கியிருக்குமிடமே படைவீடு. அலைவில்லாத உணர்ச்சி க்கு முதற் காரணமாயுள்ள துரியநிலையே மலை. சுத்தவிவேக தத்துவ அனுஷ்டாதாவே சுப்ரமணியம்,

